உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.




# சிறுவஞ்சூர்
# தோத்திரமாலை.

ஷை யூர்

சி. தியாகராய பொன்னுசாமி முதலியாரவர்கள்

விருப்பத்தின்படி,

சென்னைப்புரசை

ஸ்ரீமத் - முருகப்ப வாத்தியாயரவர்கள்

இயற்றியது.

---

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

ஷை யூர்

பூவைசியகுல உயர்துளுவ வேளாளர் பூவிருந்தவல்லி மரபு

சிவசங்கரமுதலியார் பௌத்திரரும், இராமகிருஷ்ணமுதலியார்

புத்திரருமான

ஸ்ரீபொன்னையாமுதலியார் கனிஷ்டகுமாரர்

சிறுவஞ்சூர் - முருகேசமுதலியாரவர்களால்

சென்னை:

கிச்சினர் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

ரோதிகிருது௵—தைமீ

1912.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.




# சிறுவஞ்சூர்
# தோத்திரமாலை.

ஷை யூர்
சி. தியாகராய பொன்னுசாமிமுதலியாரவர்கள்
விருப்பத்தின்படி,
சென்னைப் புரசை
ஸ்ரீமத் - முருகப்ப வாத்தியாயரவர்கள்
இயற்றியது.

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்
பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்களால்
பார்வையிடப்பட்டு,

ஷை யூர்
பூவைசியகுல உயர்துளுவ வேளாளர் பூவிருந்தவல்லி மரபு
சிவசங்கரமுதலியார் பௌத்திரரும், இராமகிருஷ்ணமுதலியார்
புத்திரருமான
ஸ்ரீபொன்னையாமுதலியார் கனிஷ்டகுமாரர்
சிறுவஞ்சூர் - முருகேசமுதலியாரவர்களால்

சென்னை :
கிச்சினர் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

விரோதிகிருதுஸ்ரீ—தைமீ
1912.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அன்பர்கட்குவிஞ்ஞாபனம்.

"அரிது அரிது மானிடராதலரிது" என்று பூலோகசரஸ்வதியாகிய ஒளவை பிராட்டியார் கூறியபடி, அனேககோடி ஜென்மாந்திரங்களின் புண்ணிய விசேஷத்தால் மனிதஜென்மங்கிடைப்பது. அங்ஙனமுண்டாயபோது அச்சென்மத்தாலடையவேண்டிய இன்றியமையாதுள்ள சாதனங்களையனுட்டித்து அச்சாதனங்களாற்கிடைக்கக்கூடிய சாத்தியமான சிவாநந்திய சாட்சாத்காரத்தைப் பெறவேண்டியது நங்கடமையாகும். இஃதுணராது அந்தோ! நம்மவருட் பலர் உண்பதும், உறங்குவதும், வயிறுவளர்த்திலேயே காலங்கழிப்பதுமாக வாணாளை வீணாளாகக்கழித்துவருதல் என்னக்கொடுமை! கொடுமை! இங்ஙனம் வாழின் மனிதஜென்மமெடுத்திருத்தினாலென்னபிரயோஜனமோ? அறியகில்லேம். ஆகலின் அகண்ட வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமான் திருவடி நீழலையடைதற்குரிய சாதனங்கள் பலவுளவேனும் ஜெகதாச்சாரிய மூர்த்திகளாகிய நமது அறுபத்துமூன்று நாயன்மார்கள் நடத்திக்காட்டிய சாதனமே எல்லாவற்றிற்குஞ்சிறந்ததென்றும். அஃதாவது பத்தியேயாம். இப்பத்தியினாலேயே நமது பெருமான் வசமாவரென்னுமுண்மையினை "பத்திவலையிற்படுவோன்காண்க" என நமது மாணிக்கவாசகர் திருவாய்மலர்ந்தருளிய வாக்கியத்தாலறியலாம். இத்தகைய அரிய பெரிய பத்தியானது உண்டாகவேண்டுமாயின் பொய், கொலை, களவு, கள், காமம், ஆகிய பஞ்சமாபாதகங்களினின்று நீங்கி ஆலய வழிபாட்டினையே யனுசரித்தல்வேண்டும். இதுபற்றியன்றோ "ஆலயந்தொழுவது சாலவுநன்று" என நமது மூதாட்டியார் திருவாய் மலர்ந்தருளினர். "கோயிலில்லாவூரில் குடியிருக்கவேண்டாம்" என்ற நீதிவாக்கியமும் இதுபற்றியன்றோ? இவ்வாலய வழிபாட்டிற்குச் சிறந்த சாதனமாயுள்ளவை விபூதி ருத்திராட்சதாரணமும் பஞ்சாட்சரதியானமுமேயாம். ஆகவே சிவசாதனமும், சிவாலய தரிசனமும், சிவத்தியானமும், சிவனடியார் நேசமும், சிவசாஸ்திர வாராய்ச்சியும் இன்றியமையாது அனுசரிக்கவேண்டிய கடமையாகும். உருவத்தியானத்தாலன்றி யொன்றுங் கைகூடாதென்பார்,

"உருவத் தியானமுட னேவாச் செபஞ்செய்
ஒருமுதலே சித்தி யுதவும்—அருவமெனப்
பிஞ்சிற் பழுத்தாற்போற் பேசிவீ ணாட்கழித்தால்
நெஞ்சம்புண் ணாகுஞ்சொன் னேன்"

என்றனர் பெரியோர். இத்தகையவற்றைச் சத்தியமெனக்கொண்டு அநாதிதொட்டு உயர்குடிப் பிறப்பாளராகிய பூவைசிய உயர்தனுவ

வேளாளர் அனுசரித்து வந்தமையாலன்றோ "சைவர்" என போக ரூடிப் பெயரை நம்மவர்பெற்றனர். இவையனைத்தையுமறந்து பெரும் பாலோர் ஒற்றுமையின்றிச் சிறுகலாம் விளைவித்துக்கொண்டு சிவா லய வழிபாடின்றி, ஆதிசைவபிராமணோத்தமர்களைக்கொண்டு நடத் தும் ஆலயபூசையினை மறந்தனர். அங்ஙனமாகவே,

முன்னவனார் கோயிற் பூசைகள் முட்டிடில்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
என்னரு நந்தி யெடுத்துரைத்தானே.

எனும் திருமந்திர திருவாக்கும் பலித்து வருகிறது. கிராமங்களின் விருத்தி நாளுக்குநாள் குறைந்துவருவது பிரத்தியட்சம். அன்றியும் சிவதீட்சையும் சிவபூசையுமறந்தனர், மறக்கவே பத்தியிழந்து பல பலதீமைகட்குட்பட்டுப் புண்ணியத்தை யிகழ்ந்தனர்.

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணலா ரதுகொண்டு வருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம லழுவுகின் றாரே.

என்ற திருமூலர் திருவாக்குப் பலிக்கின்றது. ஆகையால் இனியே னும் நம்பெரியோர் சென்ற செந்நெறியாகிய சன்மார்க்கத்தைக் கடைபிடித்து, தெய்வபத்தியிற் சிறந்து தமிழ்வேதமாகிய தெய்வத் திருமுறைகளாம் தேவார திருவாசகங்களைப் பாராயணஞ்செய்து ஆதிசைவர்களைக்கொண்டு அனாதிசைவனாகிய சிவபெருமான் ஆல யத்திற் பூசைசெய்வித்துப் பெண்டுபிள்ளைகளுடன் தரிசனம்செய்து திருவிழா கொண்டாடி இம்மை மறுமைப் பயன்களை யடைவார்க ளெனத் திருவருளை முன்னிட்டுக் கேட்டுக்கொள்ளுகின்றனம்.

நமது சிறுவஞ்சூர்க் கிராமத்தில் சிற்சில வாண்டுகட்குமுந்தி, சி. தியாகராய பொன்னுசாமி முதலியாரவர்கள் தமது அன்பின் மிகுதியாற் கேட்டுக்கொண்டபடி சென்னைப் புரசை முருகப்பவாத்தி யார் அவர்கள் பாடியுள்ள வரசித்தி விநாயகர் துவாதசவெண்பா, திருவாலீஸ்வரர் பதிகம், திரிபுரசுந்தரியம்மைப் பதிகங்களுடன், மதுரைத்தமிழ்ச்சங்கத்து மகாவித்துவான் சித்தாந்தசரபம்அஷ்டாவ தானம் பூவை-கலியாணசுந்தர முதலியாரவர்களைக்கொண்டு பாடு வித்த பாலசுப்பிரமணியர் பஞ்சரத்தினமுஞ் சேர்த்து அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது. இத்தோத்திரங்களைச்சொல்லி நமது இறை வன்திருவருளை அடைதற்குரியபாக்கியத்தை யடைவோமாக. சுபம்.

இங்ஙனம்,

சிறுவஞ்சூர்-முருகேச முதலியார்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.




# சிறுவஞ்சூர்
# தோத்திரமாலை.

ஷை யூர்

சி. தியாகராய பொன்னுசாமிமுதலியாரவர்கள்

விருப்பத்தின்படி,

சென்னைப் புரசை

ஸ்ரீமத் - முருகப்ப வாத்தியாயரவர்கள்

இயற்றியது.

---

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

ஷை யூர்

பூவைசியகுல உயர்துளுவ வேளாளர் பூவிருந்தவல்லி மரபு

சிவசங்கரமுதலியார் பௌத்திரரும், இராமகிருஷ்ணமுதலியார்

புத்திரருமான

ஸ்ரீபொன்னையாமுதலியார் கனிஷ்டகுமாரர்

சிறுவஞ்சூர் - முருகேசமுதலியாரவர்களால்

சென்னை :

கிச்சினர் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

விரோதிகிருது — தைமீ

1912.




திருஞான சம்பந்தர்.




திருநாவுக்கரசு.




ஆலால சுந்தரர்.




மாணிக்க வாசகர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அன்பர்கட்கு விஞ்ஞாபனம்.

"அரிது அரிது மானிடராதலரிது" என்று பூலோகசரஸ்வதியாகிய ஔவைபிராட்டியார் கூறியபடி, அனேககோடி ஜென்மாந்திரங்களின் புண்ணிய விசேஷத்தால் மனிதஜென்மங்கிடைப்பது. அங்ஙனமுண்டாயபோது அச்சென்மத்தாலடையவேண்டிய இன்றியமையாதுள்ள சாதனங்களையனுட்டித்து அச்சாதனங்களாற்கிடைக்கக் கூடிய சாத்தியமான சிவாநந்திய சாட்சாத்காரத்தைப் பெறவேண்டியது நங்கடமையாகும். இஃதுணராது அந்தோ! நம்மவருட்பலர் உண்பதும், உறங்குவதும், வயிறுவளர்த்திலேயே காலங்கழிப்பதுமாக வாணாளை வீணாளாகக்கழித்துவருதல் என்னக்கொடுமை! கொடுமை! இங்ஙனம் வாழின் மனிதஜென்மமெடுத்திருத்தினு லென்னபிரயோஜனமோ? அறியகில்லேம், ஆகலின் அகண்ட வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமான் திருவடி நீழலையடைதற்குரிய சாதனங்கள் பலவுளவேனும் ஜெகதாச்சாரிய மூர்த்திகளாகிய நமது அறுபத்துமூன்று நாயன்மார்கள் நடத்திக்காட்டிய சாதனமே எல்லாவற்றிற்கும்சிறந்ததொன்றும். அஃதாவது பத்தியேயாம். இப்பத்தியினாலேயே நமது பெருமான் வசமாவரென்னு முண்மையினை "பத்திவலையிற்படுவோன்காண்க' என நமது மாணிக்கவாசகர் திருவாய்மலர்ந்தருளிய வாக்கியத்தாலறியலாம். இத்தகைய அரிய பெரிய பத்தியானது உண்டாகவேண்டுமாயின் பொய், கொலை, களவு, கள், காமம், ஆகிய பஞ்சமாபாதகங்களினின்று நீங்கி ஆலய வழிபாட்டினையே யனுசரித்தல்வேண்டும். இதுபற்றியன்றோ "ஆலயந்தொழுவது சாலவுநன்று" என நமது மூதாட்டியார் திருவாய்மலர்ந்தருளினர். "கோயிலில்லாவூரில் குடியிருக்கவேண்டாம்" என்ற நீதிவாக்கியமும் இதுபற்றியன்றோ? இவ்வாலய வழிபாட்டிற்குச் சிறந்த சாதனமாயுள்ளவை விபூதி ருத்திராட்சதாரணமும் பஞ்சாட்சரதியானமுமேயாம். ஆகவே சிவசாதனமும், சிவாலயதரிசனமும், சிவத்தியானமும், சிவனடியார் நேசமும், சிவசாஸ்திரவாராய்ச்சியும் இன்றியமையாது அனுசரிக்கவேண்டிய கடமையாகும். உருவத்தியானத்தாலன்றி யொன்றுங் கைகூடாதென்பார்,

"உருவத் தியானமுட் னேவாச் செபஞ்செய்
ஒருமுதலே சித்தி யுதவும்—அருவமெனப்
பிஞ்சிற் பழுத்தாற்போற் பேசிவீ ணாட்கழித்தால்
நெஞ்சம்புண் ணாகுஞ்சொன் னேன்"

என்றனர் பெரியோர். இத்தகையவற்றைச் சத்தியமெனக்கொண்டு அனாதிதொட்டு உயர்குடிப் பிறப்பாளராகிய பூவைசிய உயர்துளுவ

வேளாளர் அனுசரித்து வந்தமையாலன்றே "சைவர்" என யோக ரூடிப் பெயரை நம்மவர்பெற்றனர். இவையனைத்தையுமறந்து பெரும் பாலோர் ஒற்றுமையின்றிச் சிறுகலாம் விளைவித்துக்கொண்டு சிவா லய வழிபாடின்றி, ஆதிசைவபிராமணோத்தமர்களைக்கொண்டு நடத் தும் ஆலயபூசையினை மறந்தனர். அங்ஙனமாகவே,

முன்னவனார் கோயிற் பூசைகள் முட்டிடில்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
என்னரு நந்தி யெடுத்துரைத்தானே.

எனுந் திருமந்திர திருவாக்கும் பலித்து வருகிறது. கிராமங்களின் விருத்தி நாளுக்குநாள் குறைந்துவருவது பிரத்தியட்சம். அன்றியும் சிவதீட்சையும் சிவபூசையுமறந்தனர், மறக்கவே பத்தியிழந்து பல பலதீமைகட்குட்பட்டுப் புண்ணியத்தை யிகழ்ந்தனர்.

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணலா ரதுகொண்டு வருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம னழுவுகின் றாரே.

என்ற திருமூலர் திருவாக்குப் பலிக்கின்றது. ஆகையால் இனியே னும நம்பெரியோர் சென்ற செந்நெறியாகிய சன்மார்க்கத்தைக் கடைபிடித்து, தெய்வபத்தியிற் சிறந்து தமிழ்வேதமாகிய தெய்வத் திருமுறைகளாம் தேவார திருவாசகங்களைப் பாராயணஞ்செய்து ஆதிசைவர்களைக்கொண்டு அனாதிசைவனாகிய சிவபெருமான் ஆல யத்திற் பூசைசெய்வித்துப் பெண்டுபிள்ளைகளுடன் தரிசனம்செய்து திருவிழா கொண்டாடி இம்மை மறுமைப் பயன்களை யடைவார்க ளெனத் திருவருளை முன்னிட்டுக் கேட்டுக்கொள்ளுகின்றனம்.

நமது சிறுவஞ்சூர்க் கிராமத்தில் சிற்சில வாண்டுகட்குமுந்தி, சி. தியாகராய பொன்னுசாமி முதலியாரவர்கள் தமது அன்பின் மிகுதியாற் கேட்டுக்கொண்டபடி சென்னைப் புரசை முருகப்பவாத்தி யார் அவர்கள் பாடியுள்ள வரசித்தி விநாயகர் துவாதசவெண்பா, திருவாலீஸ்வரர் பதிகம், திரிபுரசுந்தரியம்மைப் பதிகங்களுடன், மதுரைத்தமிழ்ச்சங்கத்து மகாவித்துவான் சித்தாந்தசரபம்அஷ்டாவ தானம் பூவை-கலியாணசுந்தர முதலியாரவர்களைக்கொண்டு பாடு வித்த பாலசுப்பிரமணியர் பஞ்சரத்தினமுஞ் சேர்த்து அச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டது. இத்தோத்திரங்களைச்சொல்லி நமது இறை வன்திருவருளை அடைதற்குரியபாக்கியத்தை யடைவோமாக.சுபம்.

இங்ஙனம்,

சிறுவஞ்சூர்-முருகேச முதலியார்.

---

15



உ

சிவமயம்.

திருசிற்றம்பலம்.

# விநாயகர் திருவவதார துவாதச வெண்பா.

---

காப்பு.

தலம்புகழ் முதல்வன் சதுர்த்தி விநாயகன்
பலந்தரு கங்கண பதிபதம் பணிவாம்.

வேண்பா.

மூவரையு முன்னளித்து முத்தொழிலுந் தந்தந்த
மூவருமொன் றுய்விளங்கு மூர்த்தியாய்—மூவுலகாள்
மாவக் கரதுண்ட மாதங்க வென்னகத்தின்
மேவக் கிருபைபுரி மேல். க.

மல்குங் கபிலமுனி வர்க்குச்சிந் தாமணியை
நல்குஞ்சிந் தாமணிவி நாயகனே—பல்கும்
மலந்தவிர்த்து ஞான மணிவிளக்கந் தந்தாள்
குலந்தழைக்க வானந்தங் கொண்டு. உ.

சங்கரிக்குச் சந்ததியாய்த் தானுதித்துச் சிந்துரனைச்
சங்கரித்த திண்டோட் சதுரனே—சங்கரியே
அஞ்சலிக்குங் காரணனே யைங்கரக ஜானனனே
அஞ்சலென் றென்னை யருள். ௩.

முடிவில்கிர வுஞ்சனெனு மூடிகத்தை யூர்ந்து
கடியசினங் கொண்டுநின்ற கால—வடிவென்னும்
விக்கினனை வென்றுலகாள் விக்கினவி நாயகனே
இக்கணமுன் வந்தா ளிசைந்து. ச.

கமலா சுரனைக் கடிந்துசிந்து வைக்கோல்
வமலா மயூரேச வாதி—குமரா
அரோகதிட காத்திரந்தீர்க் காயுடரு வாய்நின்
சரோருகப்பூந் தாளே சரண். ரு.

அனலா சுரனை யழித்தே யமரர்
மனமார் துயர்தீர்த்த மன்னே—தனதாகப்
பாலசந்த்ர வைங்கரவிப் பாலனைக்கண் பார்த்தருள்கூர்
காலன்வரா முன்னே கனிந்து. சு.

தூமா சுரனைத் துணித்துச் சுமுதைக்கு
மாமா தவமன்னர்க் கும்மருள்—வாமா
வியன்றாம கேது விநாயகனே செல்வம்
வியந்தே தருவாய் விரைந்து. எ.

பலியெனுமி ராக்கதனைப் பாரப் புடைத்தாய்
கலியுலகைக் காத்த கணேச—மலிபுகழ்சேர்
செல்வமிகு கல்வி திருவருளுந் தந்தெனையாள்
வல்வினையைப் போக்கி மகிழ்ந்து. அ.

கயமுகனை வென்றேமுன் கண்ணன்வினை தீர்த்த
வயமிகுத்த வொற்றை மருப்பா—நயவெங்
குணபதியே யானந்தக் குன்றமே செல்வக்
கணபதியே வந்தென்னைக் கா. கூ.

தாக்கரிய தேவாந் தகனை நராந்தகனைப்
போக்கியே காசிப் புரவலனைக்—காக்கும்
மகோற்கடவி நாயகனே வல்வினையோர்க் கென்றுஞ்
சுகோதயனே நீயே துணை. க0.

ஓதரிந்து ராஜ னுபிரொழித்து முன்விசுவ
நாதர்க்குக் காசி நகரளித்த—போத
உடுண்டிவி நாயகனே யுற்றதுணை நீயே
படுந்துயரந் தீர்த்தெனைக்கண் பார். கக.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# விநாயகர் திருவவதார துவாதச வெண்பா.

---

### காப்பு.

தலம்புகழ் முதல்வன் சதுர்த்தி விநாயகன்
பலந்தரு கங்கண பதிபதம் பணிவாம்.

### வெண்பா.

மூவரையு முன்னளித்து முத்தொழிலுந் தந்தந்த
மூவருமொன் றாய்விளங்கு மூர்த்தியாய்—மூவுலகாள்
மாவக் கரதுண்ட மாதங்க வென்னகத்தின்
மேவக் கிருபைபுரி மேல். க.

மல்குங் கபிலமுனி வர்க்குச்சிந் தாமணியை
நல்குஞ்சிந் தாமணிவி நாயகனே—பல்கும்
மிலந்தவிர்த்து ஞான மணிவிளக்கந் தந்தாள்
குலந்தழைக்க வானந்தங் கொண்டு. உ.

சங்கரிக்குச் சந்ததியாய்த் தானுதித்துச் சிந்துரனைச்
சங்கரித்த திண்டோட் சதுரனே—சங்கரியே
அஞ்சலிக்குங் காரணனே யைங்கரக ஜானனனே
அஞ்சலென் றென்னை யருள். ௩.

முடிவில்கிர வுஞ்சனெனு மூடிகத்தை யூர்ந்து
கடியசினங் கொண்டுநின்ற காலை—வடிவென்னும்
விக்கினனை வென்றுலகாள் விக்கினவி நாயகனே
இக்கணமுன் வந்தா ளிசைந்து. ச.

கமலா சுரனைக் கடிந்துசிந்து வைக்கொல்
வமலா மயூரேச வாதி—குமரா
அரோகதிட காத்திரந்தீர்க் காயுடரு வாய்கின்
சரோருகப்பூந் தாளே சரண். ரு.

அனலா சுரனை யழித்தே யமரர்
மனமார் துயர்தீர்த்த மன்னே—தனதாகப்
பாலசந்த்ர வைங்கரவிப் பாலனைக்கண் பார்த்தருள்கூர்
காலன்வரா முன்னே கனிந்து. சு.

தூமா சுரனைத் துணித்துச் சுமுதைக்கு
மாமா தவமன்னர்க் கும்மருள்—வாமா
வியன்றாம கேது விநாயகனே செல்வம்
வியந்தே தருவாய் விரைந்து. எ.

பலியெனுமி ராக்கதனைப் பாரப் புடைத்தாய்
கலியுலகைக் காத்த கணேச—மலிபுகழ்சேர்
செல்வமிகு கல்வி திருவருளுந் தந்தெனையாள்
வல்வினையைப் போக்கி மகிழ்ந்து. அ.

கயமுகனை வென்றேமுன் கண்ணன்வினை தீர்த்த
வயமிகுத்த வொற்றை மருப்பா—நயவெங்
குணபதியே யானந்தக் குன்றமே செல்வக்
கணபதியே வந்தென்னைக் கா. கூ.

தாக்கரிய தேவாந் தகனை நராந்தகனைப்
போக்கியே காசிப் புரவலனைக்—காக்கும்
மகோர்க்கடவி நாயகனே வல்வினையோர்க் கென்றுஞ்
சுகோதயனே நீயே துணை. க0.

ஓதரிந்து ராஜ னுயிரொழித்து முன்விசுவ
நாதர்க்குக் காசி நகரளித்த—போத
உடுண்டிவி நாயகனே யுற்றதுணை நீயே
படுந்துயரந் தீர்த்தெனைக்கண் பார். கக.

நாரணர்க்கு யோசஞா னம்விசுவ ரூபமருள்
காரணனே வல்லபைக ணேசனே—தாரணியில்
வல்வினையி னேயற்ற வாழ்வுங் குறைவற்ற
செல்வமது தந்தாள் தெரிந்து. ௧௨.

---

## சுப்பிரமணியர் துதி.

அல்லும் பகலு மனவரத மென்னுடனே
சொல்லும் பொருளும்போற் றோன்றிநிற்கும்—நல்ல
திருப்போரூர்க் கந்தா சிறியேன் றுயரக்
கருப்போரு ரென்றுகழ லும். ௧.

தருண மறிந்துதவுந் தண்போரூர் நாதா
கருணைவடி வாய்வந்த கந்தா—சரணம்
புகுவாரைக் காக்கும் புனிதாதமியேன்
சுகவாரி யேநீ துணை. ௨.

## உமையவள் துதி.

மலர்மகளை நாமகளை மாவிழியாக் கொண்டே
உலகமெலாந் தந்த வுமையே—குலவிப்
பரமனிட நீயிருக்கும் பான்மையைக்கண் டேத்தும்
வரமெனக்குத் தந்தாள் மகிழ்ந்து. ௩.

## சரஸ்வதி துதி.

வெண்டா மரைமலரில் வீற்றிருக்கு மோதிமமே
வெண்டா மரைசிறத்த மேனியளே—வெண்டா
மரைபிரம னுவில்வளர் வாணியே யென்னு
வுரையதனி னீங்கா துறை. ௪.

## இலட்சுமி துதி.

என்னைவிட்டு நீங்கா திருப்பையேல் யானுநித
முன்னைவிட்டு நீங்கா துறைகுவேன்—முன்னைவினை
வாராமல்காப்பாய் மலர்மகளே மாற்கினியே
யாரா வமுதே யறிந்து ௫.

---



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சிறுவஞ்சூர்

# பாலசுப்பிரமணியர் பஞ்சரத்தினம்.

## காப்பு.

மன்னியசூற் பாலசுப்ர மண்யர்மே லன்புடனே
பன்னுமொரு பஞ்சரத்னம் பாடவே—முன்னரிய
விக்கினவி நாயகனார் வேண்டு மருள்புரிந்து
தக்கபடி யேமுடிப்பர் தான்.

---

## விருத்தம்.

துங்கமிகு நவமணிக ளிழைத்தமகு டங்கொண்ட
 தூய்மைமிகு வாறுமுகமுந்
துலங்குபன் னிருதோளுந் திருவடிக ளோரிரண்டுஞ்
 சூழவுனை நாளும் வதியும்
மங்களமி குந்ததெய் வானைகுற வள்ளிநன்
 மாதராந் தேவிமாரும்
மனமதனி லேதோன்ற மயின்மீது வந்துநீ
 மகிழ்வாகக் காப்பதெந்நாள்
அங்கனக வில்லியுட னம்மைசிவ சாம்பவியு
 மானைமுகக் கடவுளியாரு

மடுத்தடுத் தெடுத்துமுத் தாடியுச்சி மோந்துசித
மணைத்திடு மருங்குழந்தாய்
பங்கயம தலரும்பொய் கைக்கரையி லன்னங்கள்
பரவுநற் சிறுவஞ் சூரில்
பாசசத்துருதணிய வாசையுற் றவரணியும்
பாலசுப் பிரமணியனே. க.

சித்திதரு நின்னுடைய திருவடியைச் சிறியனேன்
றினமுமனத் தேயிருத்திச்
சிந்திக்கு நியமமதை யறியாம லுழல்கின்ற
தீயனே னென்னசெய்வேன்
எத்திசையுந் தனதுசெங் கோனிலவ வேநாளு
மேற்றமா யாண்டுவந்த
வினையிலாச் சூரனுடற் பிளவாக வேவேலை
யெடுத்துமே விட்ட வேலா
பத்தியுடன் வந்துன்னைப் பணிகின்ற தேவர்தமைப்
பரிவாக வாத ரித்துப்
பகரரிய பெரும்பதவி யினில்வாழ வவர்தமைப்
பண்பாக வைத்தசீலா
பத்தியென வேமாட மோங்குவீ திகள்சூழும்
பாங்குநீள் சிறுவஞ் சூரிற்
பாசசத் துருதணிய வாசையுற் றவர்பணியும்
பாலசுப் பிரமணியனே. உ.

கஞ்சனைப் பிரணவப் பொருளதனைக் கேட்கவவன்
கலங்கியே யுரைக்கக் கண்டு
கருணையுடன் குட்டியே சிறைபிட்டங் கவன்செயலைக்
கனிவுடன் செய்து வந்தோய்
அஞ்சலென் றேசொல்லி நக்கீர தேவனி
னருஞ்சிறையை நீக்குவித்தோய்
யரனுருக் குபதேசஞ் செய்துதகப்பன்சாமி
யாகியே வைகுந்தேவே
தஞ்சமென் றடைந்தாரை யன்புடனே காக்கின்ற
தயாளகுண மேருவானோய்
தடவரைக டோறும்விளை யாடியடி யார்தமைத்
தற்காக்குங் கருணை யோனே
பஞ்சரக் கிள்ளைகள் சிவநாம மேநாளும்
பகருநற் சிறுவஞ் சூரிற்

பாசசத் துருதணிய வாசையற்றவர் பணியும்
பாலசுப் பிரமணியனே. ௩.

விண்ணுலகினைப்புரந் தேவதியு மிந்திரன்
மிகப்பயந் தேநடுங்கி
வேறுகதி யில்லாம லுனைநாடி யேவந்து
வேண்டிநின் னடியைப் போற்ற
எண்ணரிய தானவர்க ளானவர்கள் குடிமுழுது
மிமைப்பொழுதி லியமன்வசமா
யிருந்துவாழ்ந் திடச்செய்து பொன்னுலகைப் புரந்தநின்
னிருஞ்சீர்த்தி யியம்பற்பாற்றோ
மண்ணதனி லேழையேன் குடும்ப பாரந்தன்னில்
மயங்கிமிக வேயிளைத்து
வாடுமென் முகமதனை யேநோக்கி நின்கிருபை
வழங்கியாட் கொள்வ தெந்நாள்
பண்ணிசையி னோடளிகணனி பாடு முயர்சோலை
பலசூழ்நற் சிறுவஞ் சூரிற்
பாசசத் துருதணிய வாசையற் றவர்பணியும்
பாலசுப் பிரமணியனே. ௪.

அந்தகன் வந்தமே யெனைமிரட் டிடும்போதங்
கந்தோநா னென்செய்குவே
னையநீ முன்னமே யெனையடிமை யாக்கொண்டிங்
காதரித் தருளவேண்டும்
நிந்தையுறு மிவ்வுலகி னுன்படும் பாடதனை
நீயறிந் திருப்ப திலையோ
நிமலனே யுனையன்றி வேறுகதி யெற்குளதோ
நிலையிலாப் பொருள்கடம்மில்
பந்தமுற் றேவயிறு வளர்க்கவே திரிகின்றேன்
பாவிநா னென்செய்குவேன்
பாலனைக் கைவிடா தெவ்வகையி னுனுநீ
பட்சம்வைத் தாளவேண்டும்
பந்தலென வேமேகஞ் சூழ்ந்துமழை யைப்பொழியும்
பண்புநீள் சிறுவஞ் சூரிற்
பாசசத்துருதணிய வாசையற் றவர்பணியும்
பாலசுப் பிரமணியனே. ௫.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சிறுவஞ்சூர்

# திருவாலீஸ்வரர் பதிகம்.

## காப்பு.

திருமாந் தடஞ்சூழ் சிறுவஞ்சூர் வாழுந்
திருவாலீ சன்பதிகஞ் செப்பவே—திருவாரெண்
சித்திக் களித்தளிக்குஞ் சிந்தனைசெய் நெஞ்சகமே
சித்திக்க ளிற்றினடி தேர்ந்து.

## விருத்தம்.

திங்களம் பிறைகங்கை கொன்றைவளர் செஞ்சடைத்
　　திருமுடித் திரிபுண்டரந்
திகழ்நுதற் றிலதமுங் கருணைபொழி விழியுஞ்
　　சிவந்தசெம் பவளவாயுஞ்
சங்கக் குழைச்செவித் திருநீலகண்டமுந்
　　தடவரை நிகர்த்ததோளும்
ஐகமுதவு திரிபுர சுந்தரிவாமபாகமுந்
　　தாமரைச் செங்கையழகுங்
குங்கும நிறத்தசெம் பட்டாடை யரையுமணி
　　குரைகீழற் பதமிரசித

குன்றனைய தருமவிடை மேலுனைக் கண்டுகை
குவித்தருக வந்தென்னையாள்
எங்குநிறை பூரணானந்த நிஷ்கள ஞான
வெந்தைசிறு வஞ்சூரனே
இனியவடி யார்நேச விதயமலர் மேல்வாச
விறைவதிரு வாலீசனே. ௧.

உள்ளன்புகொண்டு சூளாலிளமைநீங்கி மூப்
போங்கியுந் தனது மனையை
யுதவியும் வறுமையினி னக்கமுதமமைத்து முன்
னூட்டியை யரிந்து நம்பி
மின்னும் பொய் வேடத்தினைக் கண்டங்குயிரினை
விடுத்து நிற்கா யன்பரை
வெறுத்துந் துலாக்கோலில் மனைவியுடனேறியுஞ்
வெண்ணீற்றின் மேலன்பினால்
சென்னியையிகழ்ந்துமுயர் சிகைவிளக்கேற்றியும்
சிறுவனைக் கறிசமைத்துஞ்
செங்கண் பறித்தப்பியுந் தந்தைத்தாளைச்
சிதைத்துநின் றொண்டருனையே
இன்னிலத்துற்றோர்க ளென்செய்குவே னேழை
எண்ணுசிறு வஞ்சூரனே
இனியவடியார்நேச விதயமலர் மேல்வாச
விறைவதிரு வாலீசனே. ௨.

எந்தைநின் கோயிற்றிருப்பணியி யற்றியிட்
டேற்பவர்க் கில்லையென்று
திரங்கியிட்டுத் தொண்டர் குற்றேவல் செய்துமவ
ரெண்ணத்தின்படி நடந்து
சிந்தையொருமித்துச் சிவதீர்த்தத்தில் மூழ்கிவெண்
டிருநீறணிந்து வேத
சிவாகம விதிப்படியறிந்து சிவபூசையுஞ்
செய்து திரு மந்த்ர மூல
வைந்தெழுத்தைச் செபித்தைம் பொறியினெறி செலா
தறிவோடிருந் துன்னடி வந்
துடையு மளவுந்துன்ப மடராமலடியேனை
யாண்டருள்வதுன் பரங்காண்
இந்துமண்டலமட்டு மட்டுலவு சோலை சூழ்ந்
தெழில் செய் சிறுவஞ்சூரனே

இனியவடியார் நேசவிதயமலர்மேல் வாச
விறைவதிரு வாலீசனே. ௩.

ஒண்ணுதற்றிலத வரிவையரின்புறுமுத்தி
யுணர்தருங் கந்தமைந்து
மொழிமுத்தி முக்குணமொடுங்கு முத்தியு நாளு
மோங்குவினை நீங்குமுத்தி
நண்ணும் மலமகலு முத்திவிக்ரகமுத்தி
நவையறு விவேகமுத்தி
நாடுமுயிர் கெடுமுத்தி என் சித்தி முத்தி யுண்
ணூட்டு பாடான முக்தி
திண்ணமிம் முத்தி பழிசேர் முத்தியாதலால
சிறியனேக் கை விடாமல்
திரிமலமகன்ற தண்ணருள் முத்திகாட்டி நின்
திருவடியில் வைத்தாளுவாய்
எண்ணரிய முனிவர்கண மரகரா சிவசிவவென்
றேத்து சிறுவஞ் சூரனே
இனியவடி யார்நேச விதயமலர் மேல்வாச
விறைவ திருவாலீசனே ௪.






வனமாலி போலொருவருண்டோ வுனக்கன்பர்
வையகத் தொருவரையா
மலரா யிரத்திலொருபூக் குறைய வோர்ந்து விழி
மலரணிந்தாழி பெற்றான்
சினமார்ந்த திரிபுர நகைத்தெரித் திருபோது
செங்கண்விடையாயி னனின்
திருமேனியோர்பாதி தேவியானான் தஜஞ்
செங்கை கொளுமம்பாகினன்
தனதாயனேகவித மாயன்பு பூண்டு நின்
சரணடைந்தா னின்னமுந்
தாட்டுணைக் காட்டாதிருக்கிலவை யடியனேன்
சார்ந்தடைத லெவ்வண்ணமோ
எனதாவி பொருளுடலு னினதலா தில்லையே
யிலகு சிறுவஞ்சூரனே
இனியவடியார் நேச விதயமலர் மேல்வாச
விறைவதிரு வாலீசனே. ரு.

அண்டமெல்லா மடுக்காய் படைத்தோன்சிர
மறுத்தங்கை பலிகொண்டனை
யரியினவதாரத்தினைந் தொழித்தைந்தினை
யடக்கியணியாப் பூண்டனை
சண்டனையுதைத்து மார்க்கண்டருக்கென்று பதினாறுண்டு
சாமீபமுந் தந்தளித்தாய்
திண்டிறல் மிக்குடைய வேளை நுதல் விழியினாற்
சிறுசாம்பல் செய்தழைத்தாய்
செம்புலித் தோலுடுத்தா யாதலான் மஹா
தேவநீ என்றடைந்தேன்
எண்டருஞ் சித்திவந்தண்டி மேலோர் நாடோறு
மெய்து சிறுவஞ்சூரனே
இனியவடியார் நேச விதயமலர்மேல் வாச
விறைவதிரு வாலீசனே. ௬.

ஆதாரமாறுங்கடந்து குண்டலி சத்தி
யருளால் நிராதர மோர்ந்
தப்பாலு மீதான மேற் சென்று சச்சிதா
னந்த நீயம்மையுடனே
நாதாந்த வேதாந்த சித்தாந்த மயமான
ஞான நாடகமாடுமின்
நளின பாதங்கண்டு தெரிசிக்க வெந்நாள்
நாயினுங் கடையாமெனைச்
சூதானமும் மாயையிருள் மூடிடாவணந்
தூரத்தி யழியாவளவிலாச்
சுகமுத்தி காணவந்தடிமை கொண்டருளுவார்
சுகாரம்பமா தேவனே
ஏதாகிலும் வந்திருப்பவர்க் கீகுவோ
ரெய்து சிறுவஞ்சூரனே
இனியவடியார் நேச விதயமலர்மேல் வாச
இறைவதிரு வாலீசனே. ௭.

சுத்தசாட்குண்ணிய வகண்டபரி பூரண
சுகாரம்ப துரியமயமே
சோதியே யாதியே சங்கர சதாசிவ
சுயம்பிரகாச சொருபமே

சத்தியநிர் வாணசுத் தாத்துவித சாயுச்சிய
பாத்துவ சதானந்தமே
தற்பரப ராபரநி ராமயநி தாகாச
சகல நிட்கள விநோத.
நித்தியம யாரகித முத்தரிதயாலய
நிவாச மெய்ஞ்ஞான தீப
நிகில வகிலாண்ட மெங்கெங்கு நிறை கடவுளே
நின்னிலமை:யறிவரெவர்காண்
இத்தலமு மத்தலமு மெத்தலமு மன்புகூர்ந்
தேத்துசிறு வஞ்சூரனே
இனியவடியார்நேச விதயமலர் மேல்வாச
விறைவதிரு வாலீசனே அ.

கைலாசத்திலுயர் கனகா சலத்தினிற்
கங்கைசூழ் காசிநகரில்
காளத்தி திருவாலங்காட்டில் திருவேற்காட்டில்
கச்சிகழு காசலத்தில்
செயு நாடகத்தில்லை விருதா சலங்காழி
திருவருணை வெண்ணைநல்லூர்
ஸ்ரீபஞ்சநதி கும்பகோண மானைக்காவில்
சிராப்பள்ளி திருவொற்றியூர்
மயிலாடுதுறை சேய்ஞலூர்ப் பரியலூர் மயிலை
மழபாடி யுத்ரகோச
மங்கை திருநெல்வேலி மதுரை ராமேச்சுரமு
மன்னுமித் தலமெலாநீ
இயல்பாக வீற்றிருந்தருள் காக்ஷியான்காண்ப
தென்று சிறுவஞ்சூரனே
இனியவடியார்நேச விதயமலர்மேல்வாச
விறைவதிரு வாலீசனே கூ.

திருஞானசம்பந்தர் திருநாவினுக்கரசர்
திருநாவலூர்ச் சுந்தரர்
திருவாத வூரருள் தேவாரமுடன் றிரு
வாசகந் திருவிசைப்பா
தருஞான நந்திருப்பல்லாண்டு முதலான
தமிழ்வேத திருமுறையெலாஞ்

சத்தசுர மோடுபண்ணடைவு தவராமனுன்
 சந்நிதியி லெந்தநாளும்
ஒருவாமனின்று யானுருகியே யானந்த
 வெள்ளம் பெருக்கெடுக்க
உண்மையடியாருடன் கூடியே யவருட
 னேதிவர வருள்கூருவாய்
இருமா நிதிக்கிழவனேத் துழவர்நிதி பெற்
 றிசைந்த சிறுவஞ்சூரனே
இனியவடி யார்நேச விதயமலர் மேல்வாச
 விறைவதிரு வாலீசனே. ௧0.

முற்றிற்று.

---





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சிறுவஞ்சூர்

# திரிபுரசுந்தரியம்மன்பதிகம்.

## காப்பு.

தூய திரிபுர சுந்தரியி னற்றாளி
லாய பதிக மறையவே—நேயமுடன்
வந்தா தரிக்கும் வண்மைவி நாயகனார்
செந்தாளை யென்மனத்திற் சேர்த்து.

---

## விருத்தம்.

சீரார்ந்த திருமணத் திரையம்மி மீதிட்ட
திருவடித்தண்டையிடையின்
செம்பொனெட்டியாண நவரத்தினத் தொடியுலாஞ்
செங்கையிற் கொஞ்சுகிளியும்
பேரார்ந்த சம்பந்தருக் கமுதவெள்ளம்
பெருக்குதன பாரமார்பில்
பிறங்குஞ்சரப்பளி பதக்கமுந் தாலியும்
பிரணவ்க்கம்மல் செவியும்

ஏரார்ந்த குமுதவாய் நத்துமூக்குத்தியு
　　மிணைவிழிக் கருணைநுதலு
மிந்துவதனங்கனக் கூந்தலுங்கண்டியா
　　னேத்தவந்தருள் புரிகுவாய்
தேரார்ந்த நால்வீதி மாடகோபுர மதிற்
　　றிகழ்செய் சிறுவஞ்சூரில்வாழ்
சிவையுமையந்தரி முன்னைவினை யறவந்தருளென்னை
　　திரிபுரசுந்தரி யன்னையே க.

திருமாது கேள்வனுங் கலைமாது தலைவனுந்
　　தேடரிய நீறுபூத்துச்
சேணளவு பெருநெருப் பெனவோங்கி நிமிர்தருஞ்
　　சிவபிரான் முன்னளித்த
இருநாழி நெற்கொண்டு முப்பத்திரண்டற
　　மியற்றியெண் பத்துநான்கா
மிலக்க முயிர் பேதமு மலக்கணுற்றழியாம
　　லின்னமுங் காத்துவருநின்
பெருமான் மியத்தினுக் கொப்புலகிலுள்ளதோ
　　பிரணவத் தைந்தெழுத்தாம்
பேரின்ப வமுதமே யாரிங்கு மைந்தரைப்
　　பெற்றநீ யருளாவிடிற்
றெருவீதி தொருமாட கூடமெங் கணுநிறை
　　செய்ய சிறு வஞ்சூரில்வாழ்
சிவையுமையந் தரிமுன்னை வினையறவந் தருளென்னை
　　திரிபுரசுந்தரி யன்னையே. ௨.

ஒருகொம்பிரண்டு செவி மூன்றுமத நால்வா
　　யுறும்பெரிய பிள்ளையாரு
மோருரு முகமுமீரு றுதோ ளிருதாளு
　　மோங்கிளைய பிள்ளையுடனே
கருடகாந் தருவர்கின் னரருரக ரமரருங்
　　கை குவித் தேத்து திருக்
கைலாய மலைமீது சிவபிரா னொருபாகங்
　　கலந்துநீ வீற்றிருக்கும்
பெருமித மிகுந்ததிருக் காக்ஷியுங்கண்டெமு
　　பிறப்பெனுங் கடல் கடந்து

பேரின்ப மாங்கடற் றோய்ந்தெழுந் தன்னன்பர்
பெரும்பேறு பெறுவதென்றோ
திருமகள் விலாசமுங் கலைமகள் விலாசமுஞ்
சேர்ந்த சிறுவஞ்சூரில் வாழ்
சிவையுமையந்தரி முன்னை வினை யறவந்தருளென்னை
திரிபுர சுந்தரியன்னையே. ரு.

தங்கமலை வெள்ளிமலை யென்னுமொரு குறைவிலாச்
சம்பத்தெலா மிருக்கச்
சதுமுகன் முகுந்தனிந் திரனென்பு பூண்டிடச்
சற்பநற் கச்சிறுக்கிக்
கங்கையைச் செஞ்சடையில் வைத்து நிர்வாணியாய்க்
கரத்திற் கபாலமேந்திக்
காயமேல் வெண்ணீறு பூசிவெண் பல்லினைக்
காட்டிநின் கணவனுலகில்
எங்குந் திரிந்தைய மேற்றிடுத லென்னையோ
விதி தடுக்காதிருந்தா
லேச்சல்லவோவழிவிலாத நின் கற்பினுக்
கேற்குமோ வுளவுபுகலாய்
திங்கள்மதி மண்டலஞ் சென்றோங்கு கோபுரந்
தீண்டுசிறு வஞ்சூரில்வாழ்
சிவையுமையந்தரி முன்னைவினை யறவந்தருளென்னை
திரிபுரசுந்தரி யன்னையே. சா.

அருமறை சொலிளவ னிதைநினது பதாம்புயத்
தரியவர் பிரமனதி
யமரர்கோனளகை யோன் முப்பத்துமுக்கோடி
யண்டருங் கண்டுதொழுநின்
திருமுன்னர்வருமன்னை யெழுவர்முதல் கற்பகத்
தேவர்மடவார் கூட்டமுந்
தெரிசிக்க வருபோது திசைமுகன் மகுடமரி
திருமுடி விண்ணரசன் மௌலி
இருடியர்கண் முடிமன்னரிலகு முடியீதென
விசைத் தெச்சரிக்கைகூறி
யேத்துமொழி கேட்டுருகி யின்பாலயம் புக்கி
ளைப்பாறி நிற்பதென்றோ

திருவிளக்கெனமணி விளக்குகின் மணிவயற்
செறிந்தசிறுவஞ்சூரில் வாழ்
சிவையுமையந்தரி முன்னைவினை யறவந்தருளென்னை
திரிபுரசுந்தரியன்னையே. ரு.

நாமாது பொன்முருக் காணியாழ் வீணைகொடு
நவரசாலங்காரமெய்ஞ்
ஞானரசமொடுபாடு மானந்த லகிரிசிவ
ஞானவல கிரிதமிழினல்
பாமாலை கவிராஜ பண்டிதரு மபிராமி
பட்டரும்பாடிவைத்த
பாடல் கேட்டுருகிகின் செவியுமென் பாடலைப்
பக்ஷமாய்க் கேட்குமோசொல்
பூமாது மலர்மாது சசிமாது நாடோறும்
போற்றுமந் தரியாமிநீ
புரந்தரிசௌந்தரி புராதரி நிறைந்தபரி
பூரணகருணை கடாக்ஷி
தேமாம்பழச்சாறு பாய்தரச் செந்நெல்விளை
செறுவுசிறு வஞ்சூரில்வாழ்
சிவையுமையந் தரிமுன்னை வினையறவந் தருளென்னை
திரிபுர சுந்தரியன்னையே. சா.

மூலத்திருந்து குண்டலிதனை யெழுப்பியே
சுழிமுனை வழிநடந்து
மும்மண்டலங்கடந்துச் சிவட்டந்தன்னில்
முச்சந்தி வீதிகண்டு
மேலத்து விதகிரா தாரச்சிலம்பொலிவி
ளுவிபரமாகாசமாய்
மீதான வீட்டினிற் சிவவெளி பரஞ்சுடர்
வீற்றிருந்தரசு புரிகின்
கோலத்தினைப் பணிந்துள்ள ளெக்குருகி முக்
குறும்புமலவனக் காட்டையுங்
கொளுத்திச்சுகாரம்ப மயமான திருவுருக்
கொண்டுவாழ்ந் துய்யவருள்கூர்
சீலத்தபோதனர் பராவமனு தினமுமா
தேவிசிறு வஞ்சூரில்வாழ்

சிவையுமையந்தரி முன்னைவினையறவந்தருளென்னை
திரிபுரசுந்தரி யன்னையே. எ.

அட்டதிசை பரிபாலர் மட்டிலாவானவரு
மரிபிரமனுதியோரு
மகமுடல நடுங்கிநின் னடிவந்தடைந்தமே
முறையிட்ட வர்க்கிரங்கித்
துட்டமகிடா சுரனைத் துர்க்கைமாதங்கிதிரி
சூலிமாகாளிநீலி
சோமியபிராமி சாமுண்டி வயிரவி வாமி
சூழ்பெருஞ் சேனையுடனே
வட்டவாய் முரசு வெற்றிச்சங் கொலிப்பச்சர்
வாத்திய முழங்கவுக்கிர
மஞ்சிங்கவாகன மிவர்ந்துசம் மாரஞ்செய்
வல்லாள கண்டிநீயுன்
சிட்டர்பரவுஞ்சரணஞ் சூட்டிவினை நீக்கியருள்
செய்வைசிறு வஞ்சூரில் வாழ்
சிவையுமையந்தரி முன்னைவினை யறவந்தருளென்னை
திரிபுர சுந்தரி யன்னையே. அ.

நினதுசிவ கங்கைத் தடாகநீராடிவெண்
ணீறிட்டு மந்த்ரராஜ
நெஞ்சாரவுச்சரித் தஞ்சலித்துருகியுண்
ணெக்குநெக் காய்கரைந்து
மனமுதற்கரணமசை யாதொருங்குன்னடியில்
வைத்தன்பு பொறையடக்கம்
வாய்மையுந் தவராது பக்திவைராக்கியமு
மாறுது மானிலத்தில்
கனதைதன வஸ்துவாகன மித்திர புத்திரகல்
களத்திராதி சம்பத்துடன்
கடையேனடைந்து மென்மேல்வாழ வெண்ணினே
காப்பதுன்கருணையம்மா
தினமும் வெம்புலி பசுவுமோர் துறையில் நீருண்டு
தேக்குசிறு வஞ்சூரில் வாழ்
சிவையுமையந் தரிமுன்னை வினையறவந் தருளென்னை
திரிபுர சுந்தரியன்னையே. கூ.

சீதளகலாநிதி சடாதரி பராபரி
திகம்பரிசகஸ்திர நாமி
சிவகாமியபிராமி முகசோமி கனவாமி
சிற்பராசுதந்திர நேமி
வேதவேதாந்த மீதார்ந்தாடு நடனா
விந்தபொற் சரணீ சுகுணி
வித்தகி புராந்தரி சதாநந்தி சுந்தரி
விநோதபாயா சொரூபி
பூதவேதாளங்கள் சேவிதபுராதனி
புஜங்ககங்கணி முக்கணி
புராணியென்றுன் கோயில்வந்து நாத்தழும்புறப்
போற்றவொரு வரமளிப்பாய்
சீதரன் விரிஞ்சனும் பணியுமாதேவியே
சிறந்தசிறு வஞ்சூரில்வாழ்
சிவையுமையந்தரி முன்னைவினை யறவந்தருளென்னை
திரிபுரசுந்தரி யன்னையே. க0.

முற்றிற்று.

---



உ

சிவமயம்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்து மகாவித்துவான்

சித்தாந்தசரபம்-அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றிய

# நூல்கள்.

சித்தாந்தம்.
சித்தாந்தக்கட்டளை.
சித்தாந்தசாதனக்கட்டளை.
சித்தாந்தசகாரியக்கட்டளை.
சித்தாந்தவசனபூஷணம்.
திருவான்மியூர்ப்புராணம்.
பாரதகண்டேதிகாசம்.
நீதிசாகரம்.
திருவொற்றியூர்க்கலம்பகம்.
பூவைச்சிங்காரசதகம்.
திருக்கழுக்குன்றந்திரிபந்தாதி.
செய்யுளிலக்கணம்.
திரிபுரசுந்தரிமாலை.
மகாதேவிமந்திரமாலை.
உருத்திராட்சமாலை.
அனுமசந்தேசம்.
கடம்பன்கவசம்.
தருக்கசோபானம்.
பகவத்கீதார்த்தபங்கம்.
சிவத்துரோககண்டனநிராகரணம்.
சேக்கிழார்புராணவசனம்.
சிவராத்திரி புராணவசனம்.
பூவாளூர்ப்புராணவசனம்.
திருப்பாசூர்ப்புராணவசனம்.
திருவலிதாயபுராணவசனம்.
பஞ்சேஷ்டிதலபுராணவசனம்.
திருவூறற்றலபுராணவசனம்.
சிந்தாமணித்தலபுராணவசனம்.
திருக்காளத்திதலபுராண வசனம்.
அரியதுறைதலபுராணவசனம்.
திருப்பாலவனத்தலபுராண வசனம்.
திருவொற்றியூர்ப்புராணவசனம்.
அருணாசலபுராணவசனம்.
ஆண்டார்குப்பத்தலமான்மியம்.
செங்கல்வபுரிமகாத்மியம்.
வாயிலார்நாயனார்வைபவம்.
போஜனவிதி.
உமாபதிசிவம்நெஞ்சுவிடுதூது பதவுரை.
தாயுமானவர்பாடல்மெய்கண்ட விருத்தியுரை.
பட்டினத்தார்பாடல்ஞானார்த்த தீபவுரை.
பதிகங்கள் பற்பல.